were swept down as the flow was very heavy where they fell. Sri Sankaranarayana Pothi was drowned while the other person, who did not fall in the middle of the stream, was rescued later by the local people.

(b) Caution boards have been put up warning the passers-by not to use the short-cut path to Thenaruvi as it is steep and slippery.

SRI M. K. SOMASUNDARAM: இனிமேலாவது அந்த மாதிரி "ஷார்ட்-கட்" பாதையில் வருவதற்கு நல்ல பாதுகாப்பு செய்யப்படுமா? அப்படியில்லை என்றால் அந்த இடத்திற்கு போகாமல் தடுப்பதற்கு நடவடிக்கை எடுப்பதற்கு அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இது குறுக்கு வழி. குறுக்கு வழி எதற்கும் கூடாது. அதிலும் முக்கியமாக ஆபத்து இருக்கிற இடத்தில், வெள்ளம் போகிற இடத்தில், போகக் கூடாது. அதற்கு வேண்டிய எச்சரிக்கையும் செய்யப்பட்டிருக் கிறது. வேறு வழி இருக்கிறது. அதில் வரலாம்.

*Drinking water-wells*

*590 Q.—SRI N. R. THIAGARAJAN: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மதுரை ஜில்லாவில் எத்தனை குடி தண்ணீர் கிணறுகள் தோண்டத் திட்ட மிடப்பட்டது?

(ஆ) எத்தனை குடி தண்ணீர் கிணறுகள் ஆழப்படுத்தத் திட்டமிடப்பட்டது?

(இ) எத்தனை ஓவர்ஹெட் டாங்குகள் கட்ட திட்டமிடப் பட்டது?

(ஈ) இவைகளில் எத்தனை எங்கெங்கு வேலை நடந்தது?

(உ) இன்னும் எத்தனை பாக்கியிருக்கின்றன?

(ஊ) இவற்றில் ஸ்ரீரங்கபுரம், பாலகிருஷ்ணபுரம், வெங்கிடாஜலபுரம், தேனி கூட்டுறவு காலனி ஓவர்ஹெட் டாங்குகள் கட்டிமுடிக்க எத்தனை வருடங்களாகும்?

THE HON. SRI M. A. MANICKAVELU: (அ) to (ஊ) A statement [a] is placed on the table of the House.

SRI N. R. THIAGARAJAN: இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 97 ஓவர்ஹெட் டாங்குகள் கட்டுவதற்கு திட்ட மிட்டீர்கள். அதில் 31—3—60 வரை $4\frac{1}{2}$ ஆண்டுகளில் 29 டாங்குகள் கட்டி முடித்திருக்கிறீர்கள். இன்னும் 6 மாதங்களில் 68 டாங்குகள் கட்டி முடிக்க திட்டமிட்டிருக்கிறீர்களா? இதை எப்படி 6 மாதங்களில் செய்து முடிக்க முடியும்? ஸ்ரீரங்கபுரம் என்ற ஊரில் கிட்டத்தட்ட $5\frac{1}{2}$ ஆண்டுகள் ஆகியும் 50 தடவை

[a] Printed as Appendix I on pages 668–669 infra.

10th September 1960]

பேப்பர்கள் அங்கும் இங்கும் ஓடி அலைந்துகொண்டிருக்கிறது. டிபார்ட்மெண்டை கண்டித்து தாமதமில்லாமல் உடனே வேலை செய்யவேண்டுமென்று அமைச்சர் அவர்கள் எழுதுவார்களா? படித்துப் பார்த்ததில் அமைச்சர் அவர்கள் என்ன யோசிக்கிறார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU: ஆரம்ப காலத்தில் கொஞ்சம் மெதுவாகத்தான் வேலை நடக்கிறது. கொஞ்சம் ஆரம்பித்து "மொமெண்டம்" வந்தபிற்பாடு சீக்கிரம் விரைவாக நடக்கிறது. ஸ்ரீரங்கபுரத்தில் "கண்டிரிபியூஷன்" கொடுக்கவில்லை. "கண்டிரிபியூஷன்" கொடுத்தால் அதற்கு மேல் வேலை நடக்கும்.

SRI N. R. THIAGARAJAN: ஸ்ரீரங்கபுரத்தில் "கண்டிரிபியூஷன்" கொடுப்பதாக ஏற்கனவே எழுதிக்கொடுத்துவிட்டோம். 5½ ஆண்டுகள் ஆகியும் இது சம்பந்தப்பட்ட பேப்பர் இங்கும் அங்கும் அலைந்துகொண்டே இருக்கிறது. சீக்கிரம் வேலை செய்யும்படி டிபார்ட்மெண்டை கண்டித்து ஒரு சுற்றறிக்கை அனுப்புவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: என்னிடம் இருக்கிற தகவல் "The work will be started as soon as the requisite contribution is forthcoming from this particular village".

*Corruption cases*

*591 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் நம் மாநில ஒழுங்கு நடவடிக்கைக்கான நியாய சபைக்கு (Tribunal for Disciplinary Proceeding) லஞ்ச ஊழலைப்பற்றி எத்தனை வழக்குகள் விசாரணைக்காக அனுப்பப்பட்டன?

(ஆ) அவற்றுள் தண்டனை அடைந்தவர்கள் எத்தனை பேர்?

(இ) குற்றங்களின் விவரமென்ன?

(ஈ) நிரபராதிகள் எத்தனை பேர்?

(உ) நிரூபிக்க முடியாத குற்றச் சாட்டுகள் எத்தனை?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Thirteen cases have been referred to the Tribunal for Disciplinary Proceedings for enquiry from 1st January 1960 to 4th August 1960.

(*b*) *to* (*d*) It is not possible to furnish the information as all the cases are pending enquiry.

(*e*) It will not be in the public interest to divulge the details of the charges in the cases referred to the Tribunal for Disciplinary Proceedings.